உ

சிவமயம்.

ஓம் சரவணபவாய நம:







மிகுமகங் கார மென்னும்
வெய்ய சூர் தனைத்தடிந்திங்
ககிலகா மாதி மற்றை
யசுரரைச் சிதையச் செய்து
சகலமுந் தாளுக் காணுஞ்
சாம்பிராச் சியம தீயுங்
குகனெனுங் குமரன் பாதங்
கொண்டவர் குறைதீர்ந் தாரே.

---

சிவமயம்.

ஸ்ரீ முருகன் துணை.

# ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்துதி பஞ்சகம்.

1, நித்தமெய்ஞ் ஞானச் சுடர்வடி வேலால்
நீளகங் காரமாந் தருவை
கொத்தறக் கடிந்தெங் கொடும்பவ லயமாங்
கொடியசூ ரினைப்பிளந் துனது
புத்தமு தனைய ஞானபோ னகமாம்
பூரணா னந்தமே யளித்தென்
சித்தமே சிவமா யிரண்டற நிற்குஞ்
சீரருள் சண்முக மணியே!

2. அமலனே வள்ளிதெய் வானையின் கணவா
வறுதிவஞ் ஞானமாம் பகையை
அமலமா மகண்ட விருத்தியா மயின்மீ
தமர்ந்துநீ வீட்சண வேலால்
நிமலனே நீறு யழித்து நீயுனது
நித்தியா னந்தமாம் வாழ்வை
எமதுளங் கரைய வளித்தெனை யாள்வா
யீசனே சண்முக மணியே!

3. வேதனே விமலா விண்ணவர் தலைவா
வேதத்தின் முடிதனில் விளங்கும்
போதனே புனிதா புகழுமால் மருகா
பூரண வின்பமாம் பொருளே
ஏதுமாம் பிறப்பிறப் பாதியாந் துன்ப
மென்றுமே தொடருரு தகற்றி
ஏதமற் றெளிரு மீறிலா வின்ப
மெனக்கருள் சண்முக மணியே!

4. காண்டிப தீர்த்தக் கிரைதனி லமர்ந்த
கந்தனே கருணைமா கடலே
ஆண்டவா பழனீ பாண்டவா வென்பார்க்
கருடருங் கற்பக மணியே
வேண்டுவ வெல்லாம் விரைவினில் நல்கும்
வேலவா விமலனார் தமக்கு
ஆண்டுவே ரகம்வீற் றிருந்தனை யெனையிங்
காண்டருள் சண்முக மணியே!

5. ஞாலமே லுடையார் பாளைய நகரில்
ஞானமே வழங்கவீற் றிருக்கும்
மூலமே முதல்வா முக்கணன் புதல்வா
முத்தர்க ளுளந்தனி லிலங்குஞ்
சீலனே செல்வா செந்தில்வாழ் முருகா
சிந்தையி லெனக்குநீ விளங்கி
காலனா ரிடத்திற் காட்டிடா தென்னைக்
காத்தருள் சண்முக மணியே!

---

## சுயம்பிரகாச சுவாமிகள் துதி.

பாச மனைத்தையும் தனித்தனி பரிந்திட நீக்கி
நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டி
பேசும் ஏழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித்
தூசு நீக்கிய சுயம்பிர காசனைத் தொழுவாம்.

---

## சற்குரு துதி.

முடிவிலா வின்பந் தானே முடிவினைக் காட்ட வேண்டிப்
படியினி லுருவாய் வந்து பல்முறை உபதே சித்துத்
தடையறத் தன்னைத் தானே தந்தருள் கருணை மூர்த்திப்
படிவமா மென்ற ஞசான் பதநிதம் தொழுதல் செய்வாம்.

---

ஸ்ரீ சித்ஸபேசாய மங்களம்.

## சிதம்பரம்.
## சாஸ்திராசார்ய, ராஜா. ஸோமசேகர தீக்ஷிதர் சிறப்புரை.

உயர்ந்த குரு பரம்பரையில் சாஸ்திரங்களை முறைப்படிக் கற்றுணர்ந்தவர்களும், போதிக்கும் முறையில் மிகத் திறமை வாய்ந்தவர்களும், ஸ்ரீ நடராஜப் பெருமானிடமும், தில்லை வாழந்தணர்களான பிராமணர்களிடமும் மேலான பக்தியுள்ளவர்களும், வேதாசார சற்குணங்கள் நிறைந்தவர்களுமான, சிதம்பரம் சற்குரு விலாச மடம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஸ்வாமிகள் எழுதிய 'சிவஞானபோதம்'' சூத்திரமும் உரையும் என்ற நூலைப் பார்த்தும் அவர்களே வாசித்துக் கேட்டும் மிக மகிழ்கிறேம்.

நந்தி பெருமானுக்குச் சிவபெருமானல் வடமொழியில் உபதேசித்தருளப் பெற்றது சிவஞானபோதம், இது பன்னிரு ஸூத்ரங்களை உடையது. இதனைத் தமிழ்நாட்டார் உய்தற்பொருட்டு அவதரித்த ஸ்ரீ மெய்கண்டதேவர் தமிழில் மொழிபெயர்த்தனர். அச் சூத்ரங்களுக்கு, கருத்துரை மேற்கோள் ஹேது உதாரணங்களையும் இயற்றியுள்ளார். இச் சிவஞான போதம் ராஜவித்யை, தேவவித்யை, சிவ வித்யை, மந்த்ரராஜன் என்றுசாஸ்திரங்களால் போற்றப்படும் மோக்ஷஸாதனமான பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தின் பொருளையும் பலத்தையும் நன்கு போதிக்கின்றது. இந்நூலுக்குப் பல உரைகள் இருப்பினும் எளிய தமிழ் நடையில் சுருக்கமாயும் ஸமரஸமாயும் அநேகப்பிரஸித்த உதாரணங்களுடன் பொருள்களை போதிக்கும் இந்நூல்எல்லோர்களுக்கும் மிகத்திருப்திகரமாயும் உபகாரமாயுமிருக்குமென்றே நம்புகிறேம். இந்நூல் ஸ்ரீமதானந்த நடராஜ கிருபையால் நீண்டகாலம் சிறப்புடன் பிரகாசிக்க வேணுமென்று விரும்புகிறேம்.

எல்லாம் ஸ்ரீ நடராஜர் கிருபை.

மன்மத ஹூ ஆனிமீ 15௳ (29—6—55)

ஸ்ரீமந்நடராஜமூர்த்தி துணை.

ஓம் சித்சபேசாய மங்களம்.

சிதம்பரம்.

## ஸரஸகவிராஜ; கவிமார்த்தாண்ட;

## N. S. சிதம்பரேஸ்வர தீக்ஷிதர் அன்போடு எழுதியளித்த

# சிறப்புரை.

"யஸ்மாத்ஸர்வம் ஸமுத்பன்னம் சராசரமிதஞ்ஜகது.
இதன் நமோ நடேசாய தஸ்மைகாருண்ய மூர்த்தயே"

ஸ்ரீமத் சிவபெருமான் திருவாக்கிலிருந்து வெளி வந்த ஆதிமொழியானதும், சகலமொழிக்கும் தாய் மொழியானதும் மிகத் தூய்மையானதால் ஸம்ஸ்கிருதம் எனப் பெயர் பெற்றதுமான வடமொழியிலும். நம் தாய்மொழியான செந்தமிழிலும், மிகவும் வல்லவரும்; வேதாந்த சாஸ்த்திரத்திலும், சைவ சித்தாந்த சாஸ்த்திரத்திலும், பெரும் பாண்டித்தியமும், சிஷ்யர்களுக்கு தெளிவாய்ப் போதிக்கும் திறமை வாய்ந்தவரும்; ஸ்ரீமந்நடராஜரிடத்திலும், தில்லைவாழந்தணர்களாம் தீக்ஷிதர்களிடத்திலும் ஸத் பக்தி விசுவாசமுடையவருமான சிதம்பரம் ஸத் குரு விலாஸ மடம் ஸ்ரீ சிதம்பர ஸ்வாமிகள் அவர்கள் எழுதியுள்ள "சிவஞான போதம் சூத்திரமும் உரையும்" என்ற சிறந்த நூலைப்பார்த்து மகிழ்ந்தேன்.

சிவஞானபோதம் ஆதியில் சிவபெருமானாலேயே சிவபக்தாக்ரேண்யராகிய நந்தியெம்பெருமானுக்கு வடமொழியில் உபதேசித்ததும் பிறகு ஸ்ரீ மெய்கண்டதேவர் தமிழில் பன்னிரண்டு சூத்திரங்களாக திருவாய் மலர்ந்தருளினார் என்பதும் வித்வான்கள் அறிந்

ததே. சிவஞான போதத்தினுடைய உயர்ந்த உண்மையான உள் கருத்து ஸகல வேதாகம சாஸ்த்திர ஸாரமான வேதாந்தக் கருத்தையும் அதேபோல் சைவ ஸித்தாந்தக் கருத்தையும் அனுசரித்து ஒத்து இருக்கிறது. அதாவது, அத்வைத சைவசித்தாந்த ஸாரமாயிருக்கிறது.

பின்னே வந்த பெரியோர்கள் இந்நூலினுடைய மேற்கண்ட கருத்து அறிந்தும் சகல க்ஷேத்திர சிரோரத்னமாக உள்ள சிதம்பர க்ஷேத்திரத்தில் சித்ஸபையில் ரூபாரூபமாக மூலஸ்தான நடராஜ மூர்த்தி விளங்குவதைப் பிரத்யக்ஷமாய்ப் பார்த்திருந்தும் துவைதம் வேறு; அத்வைதம் வேறு; என்று உரை நூல் எழுதியிருக்கின்றனர். அந்த அந்த வகைகளில் அவைகள் சிறந்தவைகளேயானாலும் ஸமரஸ ஆஸ்திக பக்திமான்களுக்கு இக்காலத்திற்கு இந்த உரைநூலே மிகவும் பிரயோஜனகரமாய் இருக்குமென்பது எனது அபிப்பிராயம். இதைப் படிக்கும். பண்டிதர்களும் இதை ஒத்துக்கொள்வார்கள் என நம்புகிறேன். சிதம்பரம் ஸ்ரீமந் நடராஜமூர்த்தி கும்பாபிஷேகம் நடைபெறும் இச்சமயத்தில் இந்நூல் வெளிவருவது மிகவும் பொருத்தமாகவும், எல்லோராலும் புகழ்ந்து பாராட்டத் தக்கதாகவும் இருக்கிறது.

இதை எல்லோரும் வாங்கிப் படித்து மகிழ்ந்து பாராயணஞ் செய்கிறவர்களுக்கு மேன்மேலும் சிவபக்தியும், இஹத்தில் இஷ்டகாம்யார்த்த ஸித்தியும் இறுதியில் முத்தியும் ஸ்ரீமத் சிவானந்த நடராஜ மூர்த்தி அருளால் உண்டாகும்.

மன்மத௵ ஆனிமீ 16௳ (30—6—55)

சுபம்.